இ-ள். தான் அபகரித்துக்கொண்ட குடையை மறுபடியும் பிராமணனுக்குக்கொடுத்தமையால் அவ்வேதியன் மனமகிழ்ச்சிகொண்டு சிதம்பரதலத்தில் மெய்மையையுடைய சிவபக்தியுடனே தவத்தின்மிகுந்த பெரியோருக்கு நிழலைக்கொடுக்க உதவினமையால் அப்புண்ணியத்தினாலே வேடுவன் றனது பாவங்களையெல்லாந் தொலைத்துக் கயிலாசபதவியைச்சேர்ந்தான்—எ-று. (உசு)

கோதுநீக்கிய வம்பலநினைந்திலன் குறித்தோ
ரோதுமாறுகேட் டுவந்திலனுரைத்திலனதனுன்
மாதுகண்களி கொண்டிடமன் றினின்றாடும்
போதுகண்டில னென்றநீபுகலவேண்டாவால்.

இ-ள். சகல தீவினைகளையுந்தீர்க்கும் திருச்சிற்றம்பலத்தை மனதில்நினையாதவன் சிதம்பரதலமகிமையைப் பெரியோர்களால் சொல்லச் சந்தோஷமாகக் கேட்டுமறியாதவன் நாவினாலுஞ்சொல்லாதவன் ஆயினும் சிவகாமசவுந்தரி கண்களிக்கக் கனகசபையில் நடனஞ்செய்யும் விநோதத்தை ஒருகாலத்தினுந் தரிசனஞ்செய்யாதவனென்று நீ உன் வாக்கினாற்சொல்லவேண்டாம்—எ-று. (உஎ)

தந்தபேரருட் சிதம்பரத்தலவிசேடத்தா
லந்தமில்பத மன்னதுற்றெரிசனனடைந்தான்
சிந்தைசெய்வதும் புகழ்வதுஞ்சிரத்தினாலென்றும்
வந்திசெய்வது மங்கரன்றிமற்றுளவோ.

இ-ள். தரிசனஞ்செய்தாலும் அத்தலத்திற் பிறப்பிறப்புற்றாலும்அவண் வசிப்பவர்களுக்கிடமானது துற்றெரிசனன்பிடுங்கியகுடையை மறுபடியுங்கொடுத்த புண்ணியவசத்தினால் எக்காலத்தினு மழிவில்லாத சிவபதவியைப்பெற்றான் ஆதலால் தியானஞ்செய்யத்தக்கதுந் துதிக்கத்தக்கதுஞ் சிரத்தினால் வணங்கத்தக்கதும் அச்சிதம்பரதலமேயல்லாமல் மற்றொருதலங்களிவ்வளவு மகிமையைப் பெற்றதில்லை—எ-று. (உஅ)

அறந்தயங்குமத் தலத்துமண்செங்கல்களவற்றாற்
சிறந்தவேதியர்க் கெழின்மனைசிவனொழிந்தெவையுந்
துறந்தாற்றவர்க் குறைமடந்தொடர்ந்தவன்பதனு
னிறம்பெறச்செய்து ளோர்பயனிகழ்ந்துதற்கரிதால்.

இ-ள். தருமங்கள்விளங்கும் அந்தச் சிதம்பரதலத்தில் மண்ணினாலாயினுஞ் செங்கல்லினாலாயினும் சிறப்புடைய வைதிகபிராமணர்களுக்கு அழகுபெறவமைத்த வீடும் சிவனையன்றி மற்றதெய்வங்களைத்தொழாதவைகலிங்க நிஷ்டாபரரான உத்தமதபோதனர்களுக்கு மட

முங்கட்டிவைத்து நிறைந்த பக்தியுடனே சகலவளப்பங்களையுமமை த்துக்கொடுப்பவர்களது புண்ணியத்தை அளவிட்டுச் சொல்லிமுடி யாது—எ-று. (உகூ)

அப்பெரும்பயன் மாலயனறிவரோவறியா
ரொப்பிகந்தருள் பரம்பரனுமைகரிவதனன்,
செப்புறுந்திறல் வேளிவரறிவரோதெரியா
தெப்பயன்களு மிதுதனக்கேயுமோவேயா.

இ-ள். அப் பெருமைபொருந்திய புண்ணியத்தின்மகிமையைக் கமலக்கண்ணனாகிய விஷ்ணுவும், கமலாசனனாகிய பிரமனும், அறிவ ரோ அறியமாட்டார்கள் அன்றியும் இணையில்லாத வநுக்ரகஞ்செய் யும் பரமசிவன் பார்வதிதேவி ஆனைமுகவிநாயகன் சொல்லுதற்கரிய வேலைத்தாங்கிய அறுமுகக்கடவுளும் அறிவார்களோ அறியமாட்டார் களாதலால் எத்தவங்களும் எவ்விததானங்களும் அத்தலத்திலே மனைமடங்கட்டிக்கொடுக்கும் புண்ணியத்துக்குச் சமானமாகாது.()

சூலபாணிபா லன்புடைச்சுருதியோர்தமக்கும்
ஞாலமாயையை நீக்கிபநற்றவர்தமக்குங்
கோலமாமனை மடமன்புகூடலரேனுஞ்
சாலுமத்தலத் தமைத்தவர்பெறும்பயன்சாற்றில்.

இ-ள். சூலாயுதத்தையுடைய பரமசிவன்மீது மிகுந்த பக்தியை யுடைய வேதபிராமணருக்கு அழகிய வீடுகளையும் பூமண்டலத்தின் கண் மாயையின்சம்பந்தமான தேகாதி பிரபஞ்சமனைத்தும் பொய் யென்றுணர்ந்து நன்மைபெறுஞ் சிவனடியார்களுக்கு மடங்களையும் பக்தியுடனேயாகிலும் பக்தியில்லாமலாயினுங் கட்டிக்கொடுத்தவர் கள் பெறும்பலனைச் சொல்லின்முடியுமோ—எ-று. (ருக)

மனைமடத்திடை யெல்லைபுண்மணறுகளொன்றுக்
கனையசெய்தவர் சிவபதத்தாயிரங்கற்ப
முனைவர்போற்றிட வீற்றினிதிருப்பரிம்முறையே
யினையநற்பய னேற்றுவவிசைக்குமாறென்னே.

இ-ள். அன்னவர்க்களித்த மனைகள் மடங்கள் இவைகளுக்குள் ளாக இருக்கும் மணற்கள் தூளிகள் ஒவ்வொன்றுக்கு ஓராயிரங் கற் பகாலங்கணக்காகத் தருமங்களைச்செய்தவர்களைத் தபோதனர்கள் துதிக்கத்தக்கதாக வெண்ணியவெண்ணம்போற் கயிலாசத்திலெழுந் தருளியிருப்பார்கள் இவ்வகைப்பட்ட மகாநன்மையான பலனை எடு த்துச் சொல்லுகின்ற சமர்த்துண்டானவனெவனோ தெரியவராது.()

தேனலம்புதார்ச் செஞ்சடைத்தேவர்தேவுறைந்த
ஞானமாநில மாகியசிதம்பரநகர்க்க

ஞானவன்பினு பன்பிலாதாயினுமன்ன
தானமுய்ப்பவர் சிதம்பரஞ்சார்தல்சத்தியமால்.

இ-ள். தேனவிழுங் கொன்றைமாலையைச்சூடிச் சிவந்த சடாமகுடத்தினையுடைய தேவதேவனான மகாதேவன் வாசமாய் நடனம்புரிந்துகொண்டிருக்கும் ஞானகாசரூபமான சிதம்பரதலத்தில் இகபரத்துக்கேதுவான பக்தியுடனாயினும் பக்தியில்லாமலாயினும் முற்கூறிய பிராமணர்களுக்கு வீடும் சிவனடியார்களுக்கு மடமுங் கட்டிக்கொடுக்கின்றவர்கள் சிவபதவியையடைவது நிச்சயம் இதுசத்தியம்.

அங்கிதங்கிய செங்கையானடியிணைமலர்மேற்
பொங்குமன்புடைத் தவநெறிப்பூசுரனொருவன்
றுங்கமானிலத் திருநகர்த்தூயதீர்த்தங்க
ளெங்குநாடியு மிறைஞ்சியும்படிந்துமின்புறுவோன்.

இ-ள். அழல்வாசமாயிருக்குஞ் சிவந்த கரங்களையுடைய சிவபெருமானது பாதாரவிந்தங்களிலே பக்திவளருந் தவநிலையையுடைய ஓர் பிராமணன் உத்தமபூமியிலேயிருக்குஞ் சிவஸ்தலங்களைத் தரிசனஞ்செய்தும் பணிந்தும் புண்ணிய தீர்த்தங்களின்மூழ்கியும் ஆனந்தமுற்றவன்—எ-று. (நச)

வேதநாயகன் வெளியினின்றாடுமெர்நகர்க்கட்
காதல்கூரவந் தடுத்தனன்கனகமாமறுகிற்
பாதைவந்ததோ ரிளைப்பினாற்பளிங்கினாலிழைத்த
சோதிவேதிகை யணைந்துதன்வசமறந்துயின்றான்.

இ-ள். வேதங்களுக்கிறைவனாகிய பரசிவன் ஞானாகாசமான சபையிலே நடனம்புரியுஞ் சிதம்பரதலத்தில் பக்திவிருப்பத்தோடு சேர்ந்து தங்கமயமான மாடமாளிகைகள் நெருங்கியவீதியில் வழிநடந்து வந்த வருத்தந்தீரப் பிரகாசம்பொருந்திய பளிங்குக்கற்களினாலமைத்த ஓர் திண்ணையிற்படுத்துக்கொள்ள அக்கல்லில் குளிர்ச்சிதங்கியிருப்பதாற் பூசுரன் றன்னைமறந்து நித்திரைசெய்தான்—எ-று.()

தோகைமாமயி னடமிடுஞ்சுடர்மனையொன்றிற்
காகமொன்றுசென் றன்னத்தைக்கவர்ந்துடன்விரைந்து
போகுமெல்லையின் மிகுந்துயிற்பூசுரனுவிற்
பாகமுற்றுமோ ரோதனப்பருக்கைவீழ்ந்ததுவால்.

இ ள். மேகங்கள் தவழுவதைக்கண்டு தோகையைவிரித்து மயிலினங்கள் நடனம் புரிந்துகொண்டிருக்கும் பிரகாசம்பொருந்திய ஓர் வீட்டில் ஒரு காக்கையானது புகுந்து அங்குற்ற அன்னத்தை வாயிற்கவர்ந்துகொண்டு விரைவுடனெழும்பிவருகையில் அதிகநித்

திரையினல் வாயைத்திறந்துகொண்டு துயிலும் பூசுரனதுநாவில் நனி-பாகத்தோடுங்கூடிய வச்சாதத்தில் ஓர் பருக்கைவிழ்ந்தது—எ-று.()

அன்னம்வீழ்தலு மருந்துயில்வசத்தினலறியான்
மின்னுநூனெறி வேதியன்விழுங்கினனம்ம
வென்னசொல்லுகோ மீதறியாதுசெப்காகம்
பன்னுமிப்பய னூற்சிவபதமடைந்ததுவால்.

இ-ள். அவ்வகையாய்விழுந்த அன்னத்தை மிகுதியும் நித்திரையினலறியாமல் பிரகாசம்பொருந்திய நான்முறையாவுமுணர்ந்த வத்தபோதனனுகிய வேதியன் விழுங்கினமையால் யாம் என்சொல்லப் போகின்றோம் இவை இன்னதென்றறியாத காகமானது இப் புண்ணியபலத்தினல் துதிக்கத்தக்க சிவபதவியைச்சேர்ந்தது இந்த ஆச்சரியத்தை என்னென்றுசொல்லுவோம்—எ-று. (௩எ)

முடிவிலாமறை முதல்வனையுணர்ந்துகொண்டவனுக்
கடிமையெய்திய தவத்தினர்க்கறுசுவையடிசிற்
படியில்வாசநீர் மகிழ்ச்சியாற்பரிவினையந்தோர்
நெடியநற்பய னறிவனேவறிகிலானிமலன்.

இ-ள். முடிவில்லாத வேதமுதல்வனுகிய பரமசிவத்துனது மகிமையையுணர்ந்தவர்களுக்கு அடிமைத்தொழில்செய்யுந் தவப்பலனைப்பெற்றவர்கள் மகிழும்படியாய் அறுசுவைபதார்த்தங்களுடனே அன்னமும் அளவில்லாத பரிமளத்தைக்கொடுக்குங் குளிர்ச்சிபொருந்திய நீரும் மனமகிழ்வோடு அளித்தவர்கள் அடையும் பெரிதாகிய புண்ணியங்களைப் பரமசிவனும்அறியத்தக்கவனே அறியமாட்டான்.

ஆயிரம்பெயர்க் கறுசுவையடிசிலங்களித்த
மேயசெல்வர்தம் பயனிலுமிடியுடையொருத்த
னேயவாறெரு பிடியவிழ்தரும்பயனெய்துந்
தூயதெப்பதி யினுமுளதிதுவென்பர்தூயோர்.

இ-ள். எத்தலங்களிலாயினும் ஆயிரம்பெரியோர்களுக்கு அறுசுவைபதார்த்த வகைகளோடும் அன்னமளித்தநிறைந்த செல்வத்தினையுடைய ஒருவன் அடைந்தபலனிலும் ஓர்தரித்திரன் பத்தியுடனே பொருநவள மன்னங்கொடுத்தலே உத்தமம் இஃது எத்தலத்தினும் உண்டென்று சொல்லுவார்கள் பரிசுத்தர்கள்—எ-று. (௩௯)

ஞானமங்குநின் றுடியதில்லைமாநகர்க்க
ணனசெல்வனோர் பிடியவிழளித்தற்குமற்றைத்
தானமிதொரு மிடியனெண்ணிலபலதான
மூனமொன்றறக் கொடுத்தலங்கொக்குமோவெவ்வா.

இ-ள். சிவஞானவருள்பொழியும் ஏகநாயகனான அம்பலவாணமூர்த்தி ஆனந்தநடனம்புரியுந் தில்லைமாநகரத்தில் அதிக அயிஸ்வரியமுடையவன் ஒருகவள வன்னங் கொடுத்த பலனுக்கு வேறெருதலங்களில் ஓர் தரித்திரன் தேகத்தைவருத்தி நியமத்தோடுஞ் சம்பாதித்த பொருளைக்கொண்டு எண்ணில்லாத மகாதானங்கள் குறைவில்லாமற்கொடுத்த புண்ணியஞ் சமனுமோ—எ-று. (சo)

மாடைவெள்ளிகன் னிகைநிலமரங்கரிபரிதே
ராடையெள்ளுநெல் லகம்பசுக்குடைசெருப்பாதி
யோடைசூழ்புலி யூரிடக்துத்தமற்கருதும்
வேடையந்தணர்க் குதவினோர்வியன்சிவபதத்தோர்.

இ-ள். தாமரை-நீலோற்பலஞ்-செங்கழுநீர்விளங்கும் ஓடைகள்சூழ்ந்த சிதம்பரதலத்திலே புண்ணியசொரூபரான தபோதனர்களுக்கும், வைதீகப் பிராமணர்களுக்கும், அவர்கள் விரும்பியபோது பொன்-வெள்ளி-கன்னிகை-பூமி-தோட்டம்- யானை-குதிரை-இரதம்-வஸ்திரம்-எள்-நெல்-வீடு-பசு- குடை - பாதரட்சை இவைமுதலியதானங்களை விருப்பத்துடனேகொடுத்தவர்கள் பிரகாசம்பொருந்திய சிவபதவியைச்சார்வார்கள்—எ-று. (சக)

புவியளித்தலும் போனகமீதலுங்காத்து
நவியினோற்கெழு மகிழ்ச்சியானற்றலக்கன்னிற்
கவினிலங்கால் லடிசிலைக்கண்ணுதற்கருத்தி
யவியுமிந்தியர்க் களிப்பவரவர்சிவமாவார்.

இ-ள். பூதானம் - அன்னதானமுதலியவைகளைச் செய்வதிலுங்காத்திற் கண்டகோடாலியைப்பிடித்திருக்கும் பரமசிவன் மகிழ்வெய்துஞ் சிதம்பரதலத்தில் அழகுநிறைந்த செஞ்சாலியன்னத்தை நெற்றிக்கண்ணையுடைய சபாபதியைத் தியானஞ்செய்து ஞானேந்திரிய கர்ம்மேந்திரியங்களின்வழியில் மனதைச்செலுத்தாமல் சிவசம்பந்தமாகச் சித்தத்தைச்செலுத்துஞ் சிவனடியார்களுக்குக்கொடுக்கும் புண்ணியசாலிகள் சிவசொருபமாவார்கள்—எ-று. (சஉ)

தண்டுகுண்டிகை யாடைநீர்சந்தனமலர்கள்
கண்டிகைத்தொடைகுடைசெருப்பணைக்குரணங்கலைத்தோல்
விண்டலத்துமா றுறந்தருண்மெய்த்தவர்க்கன்பு
கொண்டிவற்றினொன் றருள்பயன்சிவபதங்கொடுக்கும்.

இ-ள். பரமசிவ னனுக்கிரகம்பெற்ற மெய்ம்மையான தபோதனர்களுக்கு தண்டு-கமண்டலம்-வஸ்திரம்-உதகம்-கந்தபுட்பங்கள்,உருத்திராக்கமாலைகள், குடைகள், பாதரட்சைகள், அணைநாணகள்,மான

ரேல்கள் இவை முதலியவைகளிலொன்றேனும் பக்தியுடனே கொடுப்பார்களாயின் இவற்றில் ஒருதானத்தின்பயன் சிவபதவியைத்தரும்—எ-று. (சங)

மோதகங்களும் பூவமுமுதலியசுவைப்பா
லோதனத்துடன் விரும்பியவுண்டியுந்தந்தக்
கோதுநீக்கிட மண்ணுறக்கொம்பொடுமெண்ணு
மீதன்மேயினர் சிவபதமெய்திவிற்றிருப்பார்.

இ-ள். சிவனடியார்களுக்கு மோதகங்களையும், பணியாரவகைகளையும், அறுசுவைபதார்த்தங்களையும், ருசிகரம்பொருந்திய பசுவின் பால்-நெய்-தயிர்களுடனே அவர் களிப்படையும்படியாய் சாப்பாடு கொடுத்தவர்களும், குற்றமற்ற கன்னிகாதானம், பூமிதான முதலியவைகளையும், மனவிருப்பத்துடன்கொடுக்கும் புண்ணியவான்களும், மகாவைபவத்துடன் கயிலாசத்திலெழுந்தருளியிருப்பார்கள்—எ-று.

சாதநல்கிய புனிதனீற்றருளுடைச்சைவ
விரதமெய்த்தவர்க் கன்பினலுதவியமேலோர்
பிரமகத்தியே முதலியவினையெலாம்பெயர்ந்து
சுரர்பணிந்திடு முத்திதஞ்சூழலாகுவரால்.

இ-ள். சாதமென்னு மேகங்கள்பொழியுஞ் சுத்தஜலத்தை இரக்கத்துடன் சிவசம்பந்தமான சிவார்ச்சனைகள்செய்யும் சிவனடியார்களுக்கும், பூசனைமுதலிய விரதங்களுள்ள மெய்மையான தபோதனர்களுக்கும் பக்தியுடனுதவி மேன்மைபெற்றவர்கள் முன்பின் பிரமஹத்தியாதி மகாபாதகங்கள் செய்திருந்தாலும் அப்பாதகங்களெல்லாந் தீர்ந்து பரிசுத்தராய் தேவர்கள் தொழத்தக்க மோக்ஷவீட்டைவார்கள்—எ-று. (சரு)

சைவநூன்முறை யெழுதினர்தக்கவாதிரைநாட்
டெய்வநாயகர்க் கன்புசெய்தெய்வமாதவர்தங்
கைவழங்கினர் கான்முடியிருவருங்காணு
மெய்யர்வான்சிவ பூரணமேவனிச்சயமால்.

இ-ள். சிவசம்பந்தமான சாஸ்திரங்களையும், புராணங்களையும், எல்லாநாள்களிலும், உத்தமமான திருவாதிரைநட்சத்திரத்தில் எழுதினவர்களும், அம்பலவாணமூர்த்தியினுடைய பாதாரவிந்தங்களுக்குப் பக்திசெய்யுஞ் சிவயோகிகளுக்குக் கொடுத்தவர்களும், அரிபிரமாதிகளாலுங் காணுதற்கரிய ஞானரூபமான திருமேனியையுடைய பரமசிவனது பரிபூரணத்திற்கலந்து பேரின்பத்தைப்பெறுவர்கள் நிச்சயம்—எ-று. (சசா)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருளுருவன்சைவநூ லெழுதுமாறலேகமினி தளித்தனன்னூ
டருதலெழுத்தாணியெழு தினர்க்குநிதியுதவுதலஞ்சனந்தான்பெய்த
திருமுறைபங்கவைவைத்துக்கொடுத்தல்கலகந்தனக்குச்சேமத்தீதல்
பொருவருமிங்கிவற்றொன்றுபுரிபவர்கள்சிவபதத்துப்புகுவரன்றே.

இ-ள். கருணைவடிவாய் சிவசம்பந்தமான புராணசாத்திரங்கள் எழுதிக்கொள்ளும்படி ஏட்டுப்புத்தகங்களை விருப்பமாய்க்கொடுத்தவர்களுந் திருமுறைக்கு நன்மையானகயிறு திரித்துக்கொடுத்தவர்களும், அவற்றை எழுத எழுத்தாணிகொடுத்தவர்களும், எழுதுபவர்களுக்குப் பொருளுதவினவர்களும், அவைகளுக்கு மைக்காப்புச்சாத்தினவர்களும், புத்தகத்தைப் பதனமாகவைத்திருந்து கொடுத்தவர்களும், கலகங்களினும், பத்திரப்படுத்திக் காப்பாற்றிக்கொடுத்தவர்களும், இவ்வினையிலாத் தருமங்களி லொன்றேனுஞ் செய்வார்களாயின் கயிலாசபதவியைச்சேர்ந்து சுகமாயிருப்பார்கள்—எ-று. (௪௭)

சிவசிந்தைமறையவர்பாற் சிவலிங்கமாதானஞ் செலுத்தினோர்க
ளவமுந்துபரசிவத்தை நண்ணுவர்கள்சிவார்ச்சனையென்நாளும்பேணு
தவமன்புபெறுமன்பர்க் கங்கதற்குவேண்டுவன தருக்காலீந்தோ [ந்
ரவரன்றேவிமையவரு மடைவரியசிவபதத்துக் கதிபராவார்.

இ-ள். சிவத்தியானமுள்ள வேதியர்களுக்குச் சிவலிங்க மகாதானங்கொடுத்தவர்கள் குற்றமற்ற பரசிவ அயிக்கியம் பெறுவார்கள் சதாகாலஞ் சிவபூசைசெய்யும் விரதமும் பக்தியுமுடைய சிவனடியார்களுக்கு சிவபணிக்குவேண்டிய பண்டபதார்த்தங்கள் மனமகிழ்வோடுங் கொடுத்தவர்கள் தேவர்களுக்குங் கிடைப்பதற்கரிய சிவபதவிக்குரியராவர்—எ-று. (௪அ)

கருதியவர்பெறுமாறு துவாரகாசக்கிரமுந் தூயசெம்பொற்
குருமலியுந்திகழ்சாளக் கிராமமிவையன்பினாற் கொடுத்துளோர்கண்
மருவிரியுந்துழாயலங்கற் செந்திருமால்பதமணுகி வாழ்ந்துஞானத்
திருவளரும்பொருவரிய சிவலோகமடைவினிற்போய்ச்சேர்வரன்றே

இ-ள். சிதம்பரதலவாசிகளாகிய வேதியர்கள் பெற்றுக்கொள்ளும்படியாய் துவாரகாசக்கரத்தையும் மாற்றுயர்ந்த செம்பொன்னிறம்போன்ற மச்சங்கள் பிரகாசிக்குஞ் சாளக்கிராமங்களையும் விருப்பத்தோடுங் கொடுப்பவர்கள் வாசனைகமழுந் துளவமாலையணிந்து இலக்குமிதேவியை மார்பில்விளங்கச் செய்துகொண்டிருக்கும் நெடுமால் பதவியான வைகுந்தத்திலே போகபாக்கியங்களை அநுபவித்துக்கொண்டிருந்து பின்பு சிவானுக்கிரகம்பெற்று வரிசையாக நிகரில்லாத கயிலாசபதவியையும் பொருந்துவார்கள்—எ-று. (௪௯)

எம்பரமன்றனக்கன்பா மறையவர்க்குச்சிவனுபி யீய்ந்துளோர்க
ளம்பிகைதன்பதம்பெறுவரேதேனும்பரனடியார்க்கணுமட்டீய்ந்தோ
நம்பரிசிலுரைக்குமதென் னதனிலொருபரமாணு நலத்துக்காவிச் [ர்
செம்பதுமன்கற்பத்தி லொருகற்பஞ்சிவபதத்திற் சிறந்துவாழ்வார்.

இ-ள். எமது கர்த்தாவாகிய சிவனிடத்தில் பக்தியுண்டாகி வைதிகப்பிராமணர்களுக்குச் சாளக்கிராமநதியிலே பிறந்த சிவரூபமான சிவநாபத்தைக்கொடுத்தவர்கள் சிவகாமசவுந்தரியினுடைய பாதாரவிந்தம்பெறுவார்கள் சிவபக்தர்களுக் குதவியாகத்தக்க எப்பொருள்களாயினும் அணுவளவேனுங் கொடுத்தவர்கள்பெறும் மகாபலனைச் சொல்லவேண்டுமாயின் அவர்களுக்குக்கொடுத்த பதார்த்தங்களில் ஒரு அணுவளவிற் பதினாறுபங்கி லோர்பங்காகிய பரமாணுவின்நன்மைக்குச் செந்தாமரையில் உற்பவித்த முதல்வனான பிரமனது கற்பகாலங்களில் ஒரு கற்பகாலவரையில் கயிலாசத்திலே போகபாக்கியங்களை யநுபவித்துக்கொண்டு பிரகாசிப்பார்கள்—எ-று. (ருo)

பொங்கியவன்பிலரேனு முளரேனும்புண்ணியகன் மங்கட்கேற்ற
வங்கமுளதேனுமில தேனுமியற்றுவராகி லந்தக்கன்மந்
தங்குறைய்கந்துநிறை பூரணமாமவைமற்றைத் தலத்துண்டாகா
துங்கமலிதவமுனிவ வெத்தலமுமிதற்கொவ்வா சொல்லுங்காலே.

இ-ள். பெருகிய அன்பில்லாதவராயினும், அன்புடையவராயினும், தருமஞ்செய்வதற்குத் தக்க இலட்சணம்பொருந்தியிருந்தாலும்;தன்னல் இயன்றமாத்திரம் புண்ணியங்களைச்செய்தால் அவை குறைவில்லாமல் பரிபூரணமாகநிறைவேறும் இம் மகிமையைப்போல வேறொரு தலங்களிலேயும், பூரணமாகநிறைவேறாது ஆதலால் உயர் தவத்தின் மிகுந்த சயிமினியே சொல்லுமிடத்து எத்தலங்களையுமிதற்கிணையாகச் சொல்லப்படாது—எ-று. (ருக)

மன்றொளிரத்தலந்தன்னி லோமங்கள்விரதங்கண் மந்திரங்க
டுன்றுநெறிச்சிவார்ச்சனைகண் முதலானவியற்றிவருந் தூயமாந்தர்க்
கொன்றனந்தமையமிலை தென்புலர்க்காயறவோருக் குண்டியீந்தான்
முன்றலைகயமூவகையிற்சுற்றமும்போய்ச்சிவபதத்தின்முதல்வராவார்

இ-ள். திருச்சிற்றம்பலம் பிரகாசிக்கும் அச் சிதம்பர தலத்தில் ஓமங்கள், யாகங்கள், விரதங்கள், மந்திரங்கள், வேதாகமவிதியின்படி சிவபூசைகள்முதலான சிவபுண்ணியங்கள் செய்துவரும் புண்ணியர்களுக்கு அளவிறந்த பலனைக்கொடுக்கும்இம்மகிமைக்குச் சந்தேகமில்லை பிதுர்தேவதைகளுக்குத் திருப்தியாகத்தருமபுருடரானபிராமணர்களுக்கும், சிவயோகிகளுக்கும், அன்னங்கொடுத்தால் தாய்வமிச

த்தார், தந்தையின்வமிசத்தார், பெண்சாதியின்வமிசத்தார் இம்மூ வகையுமீளோரும் கயிலாச பதவியைச்சார்ந்து ஆதிக்கமாகயிருப்பார் கள்—எ-று. (ருஉ)

மற்றொருதேயந்தன்னின் மரணமடைந் தோர்தமக்கிம் மன்றுசூ ழப், பெற்றதலத் திடையடைந்து பிண்டவுதகக்கிரிகை யேணிலிந்த ப், பொற்றலத்தி லிறந்தவர்தம் பயனுளதன்னிய தலத்துப் பொன் றினுேரொன், புற்றருள்கொண் டத்தலத்திற் புதைக்கில்வினை கெடமு த்தி யறுவாரன்றே.

இ-ள். மற்றொருதேசங்களில் இறந்தவர்களுக்கு இக்கனகசபை யைச்சூழ்ந்து மகிமைபெற்ற புண்டரிகபுரத்தில்வந்துதிலகற்பணமு தலிய கிரியைகளைச் செய்வாராயின் அழகுபொருந்திய அச்சிதம்பர தலத்தில் இறந்தவர்கள் பெறும்பேறு சித்திக்கும் அன்றியும் அன்னி யதலங்களில் இறந்தவர்களது என்பை விருப்பமாகக் கொண்டுவந்து இத்தலத் தெல்லைக்குள்ளாகப் புதைத்தால் அவர்களிழைத்த பாதக ங்க ளெல்லாமகன்று மோட்சத்துக் கேதுவான சிவபதவியைச்சேரு வார்கள்—எ-று. (ருங)

எத்தலத்திலிறந்தாலு மிறந்தவர்க்காயனவீட்டி யிபைந்தவாகொண் டத்தலத்திற்புரிந்தக்கா லவர்கள்பரமுத்தியினை யடைவர்முத்த நத்துலவுஞ்சிவகங்கை மூழ்குங்கான்மந்திரங்க ணவிற்றுங்காண்மன் றுத்தமனைக்காணுங்கா லெவணாகினைந்தாலுமவ ருறுவர்முத்தி.

இ-ள். எந்தத்தலங்களி லிறந்தாலும் இறந்தவர்களுக்குக்கருமக் கிரியை முதலியவைகளை யெவர்களைக் கொண்டேனும் அச் சிதம்பர தலத்தில்செய்தால் அவர்கள் மேலான சிவகதியைப்பெற்றுமுத்தரா வார்கள் சங்கினங்களுலவுஞ் சிவகங்கையில் ஸ்நாநஞ் செய்கின்றவே ளையிலும் பஞ்சாக்ஷரமந்திரங்களை ஜெபிக்கின்றவேளையினும் கனகச பையில் சபாபதியைத் தரிசிக்கின்ற வேளையினும் யாவனாயேனும் நி னைத்தா லங்கவரும் சிவபதவியைச் சேர்வார்கள்—எ-று. (ருச)

பற்பலநன்னுக்கொண்டு பலகாலும்புகலினுமப் பதியினுள்ள, நற் பெருமைதொலையுமோ வானுலுஞ்சுருக்கமா நவிற்றுகின்றேம்,பொற் பொதுவிற்செங்கமலப்பொற்பாதங்கண்டோரப் புரியின்மாய்ந்தோ, ரற்புதமுத்திக்குரியர் மற்றொருநற்றலத்தில்லை யறிவான்மிக்கோய்.

இ-ள். பற்பல நல்லாவுகளைக்கொண்டு அநேகந்தரஞ்சொன்னு லும்அந்தச்சிதம்பரதலத்திலுண்டாகிய நன்மையைத்தரும்அதிசயத் தைச் சொல்லிமுடியாது ஆயினுஞ் சுருக்கமாகச் சொல்லுகின்றேம் பொன்னம்பலந்தின்கண் ஆனந்த நடனம்புரியும் அம்பலவாணமூர்

த்தியினது அழகிய செந்தாமரைப் பாதங்களைத் தரிசனஞ்செய்தவர்களும் அத்தலத்திலிறந்தவர்களும் மோட்சம்பெறுகின்ற புதுமையைப்போல மற்ற எத்தலங்களினும்கிட்டாது ஞானத்தினுன் மிகுத்தசயிமினியேயென்று வேதவியாசர் திருவாய்மலர்ந்தார்—எ-று. (ருரு)

ஒருவருக்கு முரைத்ததில்லை யத்தலத்திற் பெருமைவே றுணர்ந்தோரில்லை; யருமறையின்முடிவினுள தந்தமறைமொழியறியு மதனை ஞானத், திருவுருவிலொருபாகம் பெண்ணுருவம் படைத்துடைய தேவதேவ, னருள்புரிய வறிந்துயர்ந்தேன் வேறொன்றான் முனிவரயா னறிந்தே னல்லேன்.

இ-ள். அத்தலத்தின் மகிமையை யாம் ஒருவருக்குஞ்சொன்னதில்லை அன்றியும் என்னைத்தவிர மற்றொருவருக்குந் தெரியமாட்டாது அரியவேதங்களின் சிரமான உபநிடத மகாவாக்கியங்களில் சொல்லும்பொருள்களை ஞானசொரூபத்தினுல் பார்வதியை இடப்பாகத்திற் படைத்த தேவாதிதேவன் என்னிடத்திற் கருணைவைத்து உபதேசஞ் செய்த பாக்கியவசத்தினுல் தெரிந்து கடைத்தேறினன் மற்றொரு விதத்தாலறிந்தல்ல முனிவரனேயென்று வாதராயணர் வகுத்துரைத்தார்—எ-று. (ருசா)

போதநெறிதரு சுருதிப்புராணநெறி வல்லவர்க்குட் பொலிவுமிக்கோன், சூதமுனிவரமெனக்கு மிறைவனுக்கு மன்புடைய தூய்மைகொண்டோ, னுதலினு லவற்குரைத்தோ முள்ளபடியாங்கவன்போலறியாரில்லை, நீதவறுவன்புடையை யாதலினு னினக்குமிது நிகழ்த்தினேமால்.

இ-ள். ஞானமார்க்கத்தைக் கொடுக்கும் வேதபுராணங்களின்விதியையுணர்ந்த வல்லவர்களுள் அதிகமேன்மைபெற்ற சூதபுராணிகனை இத்தபோதனன் நமக்கும் பரமசிவத்துக்கும் விருப்பங்கொள்ளத்தக்க பரிசுத்தனுதலால் அச்சூதபுராணிகனும் அறியச்சொன்னோம் அன்றியும் அவனைப்போல் கிரமத்தின்படி அறியத்தக்கவர்கள் மற்றொருவருமில்லை சயிமினியே என்னிடத்திலுஞ் சிவனிடத்திலும் தவறுதலில்லாத பக்தியையுடையவனுதலின் அந்தரகசியப்பொருளைநீ தெரிந்துகொள்ளச் சொன்னோமென்று பராசரியர் திருவுளம் பற்றினர்—எ-று. (ருஎ)

ஆதாரமாறினுக்கு மயனின்றபொருண்மன்று ளாடாகின்ற,பாதாரவிந்தமலர் கண்டவர்கண் முந்தரியான் பகர்ந்தவெல்லா, நாதாதிகடந்தபர னருளிலோர்க்குரைத்தனு னண்ணியன்னோர்க், கோதநிமுதலவன்மே லன்புடையோர் தமக்கென்று முரைத்தல்செய்வாய.

இ-ள். ஆறுதாரமுதலிய கமலங்களுக்கு மேலாயிருக்கும் பராபரவஸ்துவாய் திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தநடனம்புரியுஞ் சபாபதி

யினுடைய சரணகமலங்களைத் தரிசனஞ்செய்தவர்கள் முத்தியைப் பெற்றவர்கள் நாமுரைத்தவையெல்லாம் நாதவிந்துகளாதீதனான பரமசிவன் றிருவருள் பெறாதவர்களுக்குத் தரிசனங்கிட்டாது சிவமகிமையைக் கேட்கவும் யோக்கியமல்லாதவ ராகையால் அன்னவர்களுக்குபதேசஞ் செய்யவேண்டுவதில்லை சிவனிடத்தில் பக்தியையுடையவர்களுக்கு எப்போதும் இந்தச் சிவமகிமையைச்சொல்லக்கடவையென்று வாதராயணர் உபதேசித்தருளினார்—எ-று. (ருஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஈட்டும்வல்வினைத் தொகுதியாலந்தா வெழிற்சிதம்பரத்துண்மை
காட்டுமாமறை யாகமபுராணங்கள் கண்டுமென்னதுகாணூற்
கேட்டுமங்கது கேட்கிலர்மாயையின் வளர்பெருவசத்தானன்
றூட்டமற்றவர் மயக்குறுமயக்கையா நவிற்றலரம்படித்தன்றால்.

இ-ள். பூர்வஜனனங்களிற்செய்த மகாபாதகக்கூட்டங்களின்வருமையினால் கொடுமை பொருந்திய மதிகொண்டிருக்கும் பாதகருக்கு அழகியஞானகாசசொரூபமான சிதம்பர ரகசியப்பொருளின்நிலைமையை வேதாகமபுராணங்களி லெடுத்துச் சொன்னாலுங்கேளாதவர்போலிருப்பார்கள் அஃதென் யாதுகாரணமெனில் மகாமாயையினது பெருக்கத்தின் கொள்கையினாலே நன்மையாகிய ஞானக்கண்ணில்லாமையான் அவர்களை மயக்கச்செய்யும் அம்மாயையின் மயக்கத்தின் வறுமையை நம்மாற்சொல்லி முடியத்தக்கதல்ல—எ-று. (ருகூ)

மக்கடந்தையர் தாய்தமர்மனைவிபொன் மனைதரையிடைச் சிந்தை
புக்கழுந்தின ரென்னுங்கொள்வரோ புகன்றபல்பவந்தன்னிற்
றக்கமாமறை மிருதியாகமநெறி சரித்திணாயிருதாண்மேன்
மிக்கவன்பின ரிருசெவிக்கிவ்வுரை விளம்பருமமிர்தாமால்.

இ-ள். மாதா·பிதா·மனைவி-மக்கள்-பந்துஜனங்கள்-பூமி- வீடு-பொன் இவைகளி லாசைகொண்டு அஞ்ஞானத்தில் மூழ்கினவர்கள் என்வசமாகிய வேதாகமபுராணத்தி னுண்மையை அங்கீகரியார்கள் மற்ற எவர்கள் அங்கீகரிப்பரெனின்நவிலத்தக்க நன்மையைச்சார்ந்த அநேகஜனனங்களில் மேன்மையான மகிமையையுடைய வேதபுராணங்களின் விதிப்படிக்கு ஆசாரமாகநடந்து சிவனுடைய உபயபதாம்புயங்களில் மிகுந்தபக்தியையுடையவர்கள் இருசெவியிலும் இம்மகிமாதிசயத்தைத் தேவாமிர்தமாகக்கொண்டு ஆனந்தமடைவார்கள்()

சொல்லுமாறினி யென்னைகொலெண்ணிலாச் சுருதிகட்கணியான
தில்லையம்பலப் பெருமையையவர் தெளிவுறவுரைத்தோம்யா
மில்லையாயினு மறைமொழியுணர்ந்தவ ரிறைதிருவருடன்னு
னல்லவாறென வினிதினிலறிந்தரு ணண்ணுவராமன்றே.

இ-ள். இனிமேற் சொல்லவேண்டிய முறைமையென்கொல்கேட்கவேண்டிய துண்டானுற் சொல்லும் எண்ணிறந்தவேதங்களுக்கும் ஆபரணரூபமாய் வயங்குந் திருச்சிற்றம்பலத்தில் பரமசிவனனுக்கிரகத்தினுற் சிதம்பரதலமகிமையைச் சமர்த்துள்ளவராயிற் றெளிவாகச்சொன்னேம் யாம்சொல்லிய வசனங்களில் நன்மையில்லாமலிருந்தாலும் வேதமொழியை யுணர்ந்தவர்கள் பரமசிவனனுக்கிரகத்தினுல் நன்மையுள்ளதென்று இனிமையாகக்கேட்டுச் சிவனருட் பெறுவார்களென்று வாதராயணர் மொழிந்தார்—எ-று. (சூக)

யானுநான்முகத் தொருவனுந்திருவினுக்கிறைவனுமிமையோர்தங்
கோனுந்தெய்வமா முனிவருமுலகருள் கொடியிடையொருபாகன்
ருனும்வந்தெதிர் சாற்றினுமுணர்வரோ தகவிலார்மணமுஞ்செந்
தேனும் வீசியபொழின்மலிதில்லையிற் றிகழ்பெருமையையம்மா.

இ-ள். சுகந்த பரிமளத்தையுந் தேனையுஞ் சொரிந்துகொண்டிருக்குந் தோப்புகள்சூழ்ந்த அலங்காரத்தையுடைய சிதம்பரதலத்தின் மகிமாதிசயத்தை வேதவியாசனென்னும் யானும், நான்முகத்தோனுகிய பிரமதேவனும், செந்திருவின் நாயகனுகிய மகாவிஷ்ணுவும்,தேவர்களுக்கிறைவனுன தேவேந்திரனும், கடவுட்டன்மைபெற்ற மகாமுனிவர்களும்,உலகங்களனைத்தையுமீன்ற சிவகாமசவுந்தரியைவாமபாகத்திலணிந்த பரமசிவனும் பிரசன்னமாக எதிரேநின்று உபதேசஞ் செய்தாலும் அவிவேகிக ளறியமாட்டார்கள்—எ-று. (சூஉ)

தேடருங்கதி ரம்பலத்தின்பமெய்ச் சின்மயவியோமத்தி
னுடல்கண்டவர் முத்தரேயென்றியா னறைந்ததுநிறைவேதப்
பாடன்மாதவ மறைமுடிவுளதுவெம் பாசம்வீசினர்வாசத்
தாடரும்பர மன்றிருவாக்கினுற் சாற்றியதாமன்றே.

இ-ள். வேதங்களைப் பூரணமாயுணர்ந்த சயிமினியே அளவிடப்படாத காந்தியையுடைய பொன்னம்பலத்தில் ஆனந்தரூபமாய் ஞானவடிவாய் பரமசிவத்தின் நடனவிநோதத்தைத் தரிசனஞ்செய்தவர்கள் முத்தியைப்பெறுவார்களென்று நாம்சொல்லியது வேதமுடிவிலுண்டானபொருளாம் இதன்படி பாசபந்தங்களையறுத்த பக்தஜனங்கள் சுகம்பெறுவதற்குப் பாதாரவிந்தங்களைக் கொடுக்கும் பராபரவஸ்துவான பரமசிவன் தமது திருவாக்கினுல் மொழிந்ததென்றுவேதவியாசர் திருவாய்மலர்ந்தார்—எ-று. (சூஈ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னவனைக்கிரதயுகஞ் சிந்தித்தியாகங்கண் முயன்றும்வேதஞ்
சொன்னநெறித்திரதயுகத் தரிதென்றுமகங்தவங்க ளருளாற்செய்து

மின்னநெறிமுடியாமற் றுவாபரத்திலருச்சனைக ளிசைந்துமுன்னந்
துன்னுமருவினையொழிந்து வீடடைவரெனச்சிருதிசொல்லுமன்றே.

இ-ள். ஆதிகாரணனாகிய பரமசிவனைக் கிரேதாயுகத்திலேவேத விதியின்படி தியானித்தும் யாகங்கள்முடித்தும் திரேதாயுகத்திலே முன்சொல்லிய நிலைபோன் முடிப்பதரிதென்று யாகங்களுந்தவங்களுஞ்செய்தும் இவ்வகை நடப்பது பிரயாசையென்று அதினும் எளிதாகத் துவாபரயுகத்திலே அருச்சனைமுதலிய சோடசவுபசாரங்கள் செய்து பிராரத்வ வினைகளைத்தொலைத்து மோட்சவீட்டாகிய சிவபதவியைச் சேர்வார்களென்று வேதங்களிற் சொல்லுகிறதென்று வாதராயணர் திருவாய்மலர்ந்தார்—எ-று. (சுச)

மலினவினையாவுக்கு முறைவிடமாய்நெறிமீதி மாயத்தோற்றுங்,க
லியுகமாகியகாலத் தியாவேருங்காமாதிக் கடலின்வீழ்ந்து, மெலியு
முணர்வினராகிப் பொல்லாதவாழ்க்கையினை விட்டுநீங்கி,யொலிகொ
ண்மறைபுகன்முத்தி யுறுதலரிதெனவுரைப்ப ருயர்ந்துளோர்கள்.

இ-ள். அஞ்ஞானமயமான வினைகளெல்லாமிருக்குந் தானமாய் நன்மார்க்கமும் நீதியுங்கெடத்தக்கதாகிய கலியுகத்திலே காமாதிஅந்தரங்க சத்துருக்களென்னுங் கடலுட்டோய்ந்துஅறிவழிந்தவர்களாய் ஒருகாலமும் நீங்காதகொடுமையைத் தொலைத்தகன்றுசப்திக்கும் வேதங்களிற்புகலும் முத்தியைச்சாருவ தருமையென்று பெரியோருரைப்பார்கள்—எ-று. (சுடு)

இயம்புநெறியெவ்வுகத்து மியற்றினோரியற்றாதோர் யாவரேனு
மயங்குகொடும் பிறப்பிகந்து மாமுத்திபெறுமாறு மன்றுணின்ற
புயங்கநடவடிவுமத் தலவடிவுமாய்நின்றான் புகர்மாமாய்த்த
வயம்புனைரிந்திங்கண்முடிச்சங்கரன்பொங்கரவணியும்வானோர்நாதன்

இ-ள். கிரேதாயுகமுதலிய யுகங்களிலே நடக்குமுறைமையை முற்சொல்லிய நியமப்படிக்கு நடந்தவர்களாயினும் நடவாதவர்களாயினும் மாயாவிகாரத்தினால் மதிமயங்கிக் குற்றமாகிய ஜனனங்களில் உழல்வதைநீங்கி மேன்மைபொருந்திய மோக்ஷத்தைப் பெறும்விதமெப்படியென்றால் புள்ளிபொருந்திய மத்தகத்தையுடையமதயானையையுரித்துப் போர்த்துக்கொண்டும் வெற்றியினாற் சந்திரனைச்சிரோமணியாகவணிந்து அடியார்களுக்கு நன்மையைத் தருபவனாகியும் கோபத்தினாற் கொதித்தெழும் நாகங்களை ஆபரணமாகஅலங்கரித்துக்கொண்டும் விளங்கும் தெய்வபிரானாகிய பாபசிவன் திருச்சிற்றம்பலத்தில் நன்றாகப் படம்விரித்தாடுவதுபோன் மெல்ல வரைந்தாடும்

அந்த நடராஜமூர்த்தி சொரூபமாகவும் சிதம்பரதலசொரூபமாகவும் இவ்விரு திருமேனிகொண்டு எழுந்தருளியிருக்கிறார்—எ-று. (சுசு)

முத்தொழிலுமுயன்றிடுவான் முக்குணத்தான் மூவடிவமுயங்கி யோங்கி,யத்தகையதொழிற்கயலாய் ஞானனந்தத்திரட்சியாயெவர்க் கு, மெத்தகையபதியாகி யருள்கூடவிளங்கிறை விமலன்கண்டோ ர்,சத்தியமுத்தியினடையமன்றிநடம்புரிந்தென்றுந்தயங்காநின்றான்

இ-ள். சிருட்டி-திதி-சங்காரமென்னு மூன்று அதிகாரமுஞ்செய் து உலகங்களை இரட்சிக்கும் பொருட்டாக இராசதகுணத்தி னியற் கையாற் பிரமதேவனாகியும் அந்தரங்கத்திற் றமதமுஞ் சத்துவமுங் கொண்ட நாராயணனாகவும் சத்துவத்தின்மேற் றமதங்கொண்டஉ ருத்திரமூர்த்தியாகவும் இம்மூன்று திருமேனியான் முத்தொழினடா த்தி வளரும் அம்மேன்மையுற்ற மூன்றதிகாரங்களுக்கும் புறம்பாய ஞானனந்தவுருக்கொண்டு விட்டுணுவாதியாவரும் பசுவாகவும்தான் பதியாகவும் அநுக்கிரகசத்தியானசிவகாமசவுந்தரியுடனே பரஞ்சோ திமயமாய் எழுந்தருளியிருக்கும் அம்பலவாண மூர்த்தியாகித் தம் மைத் தரிசனஞ்செய்தவர்கள் மெய்மையான மோக்ஷத்தைப்பெறும் பொருட்டாகத் திருச்சிற்றம்பலத்தில் எப்போதும் ஆனந்தநட்னஞ் செய்துகொண்டு விளங்குகின்றார்—எ-று. (சுஎ)

ஆருயிரின்பொருட்டன்றித் தொழிலுளவோ வாதிதன்க்கருளான ந்தப், பேருருவம் படைத்துடைய பேராட்டி யொலிபாலிற் பிரியா தோங்கப், பாருருவாத்தன துருவாம் பதியிலதிசயங்கொண்டுபழநூ ல்வேத, மோருருவமெனப்புகல வொளிபெற்றகளி நடங்கண் டுயர் வாயன்றே.

இ-ள். ஜீவாத்மாக்களைக் கடைத்தேற்றும் பொருட்டே யன்றி ஆதிநாயகனுக்கு வேறு தொழிலுளவோ பேரின்பவ நுக்கிரகத் திரு மேனிகொண்டு லோகநாயகி வாமபாகத்தைவிட்டு நீங்காமல் வயங்க புண்ணியதலங்களுக்கெல்லாம் உத்தமமான சிதம்பரதலமே தன்னு டைய தேகமாய்விளங்கும் தில்லைநகரிலே புதுமைபூண்டு ஆதிவேதப ராபரவஸ்துவான ஏகமூர்த்தியென்று மொழியத்தக்கபிரகாசங்கொ ண்ட ஆனந்தத்தாண்டவத்தைத் தரிசித்துக் கடைத்தேறுவாய் சமி மினியே யென்றுவாதராயணர் திருவாய்மலர்ந்தார்—எ-று. (சுஅ)

செஞ்சடையும்பிறையுமிள முறுவல்வதனமுங்குறியுந் திகழ்கண் மூன்று, நஞ்சணிகண்டமுந்தோளு மார்புமெரியகரடிக்கை நலனும்

விசி, யஞ்சல்புரிகரமுமனை யும்புலியினதளுமெடுத் தாண்டதாளுங், குஞ்சிதமுமுயலகன்மேற் றிருத்தாளுமுழுநீறுங் குலவியோங்க

இ-ள். சிவந்த சடாமகுடமும், இளம்பிறையும், குறுநகையால் அலங்காரம்பெற்றமுகமும், நாககுண்டலமும், பிரகாசிக்குஞ்சோதி மயமான மூன்றுநேத்திரங்களும், ஆலகாலவிடத்தினல் விளங்குநீலகண்டமும், நான்குபுயங்களும், சிரமாலிகாபரணமும், முப்புரிநூல் விளக்கமும், ஒருகரத்தில் மழுவும், ஒருகரத்தில் தமருகமும், இடையிற் இபுலித்தோலும், டதுபாதத்தைத்தூக்கி வலதுபாதப்பெருவிரலை முயலகன்முதுகிலூன்றி நிற்குங்கோலமும், விபூதிதூளணமும், திரிபுண்டரமாக வணிந்திருக்கும் அழகு ஓங்கவும்—எ-று. (கூகூ)

எப்போதும்யாவர்க்கு மெவ்வரமுமீந்திடுவா னிறைவனின்ற, வொப்போதவரிதாமத் திருவுருவங்கண்டுளமு முயிருமூனு, மப்போதே யுருகுபர வசப்பேரானந்தத்தி லரிதோமுத்தி, கைப்போதுங்கட்போதுந் திகழவிறைஞ்சிக்கண்டு களிப்பாயன்றே.

இ-ள். எந்தவேளையினும் அவரவர்கள் நினைத்த வரங்களைக்கொடுக்கும்பொருட்டாக நமது கர்த்தனுகிய பரசிவனெழுந்தருளியிருக்கு மகிமையையும் ஒப்புவமை சொல்வதற்கரிய ஞானசொருபத்தைத் தரிசனஞ்செய்து சித்தஞ்சடமுஞ் ஜீவனு மொருங்குபட்டுருகித் தன்னைமறந்து பேரின்பம் பெறுவதைவிட்டு மோட்சம்பெருமையைப்பெற்றநல்ல ஆசையினுல் கரங்களாகிய தாமரையினுல் விளங்கப்பூசித்துத்தொழுது கண்களாகியகமலங்களினுற்றரிசித்து ஆனந்திப்பாய்சயிமினியேயென்று வேதவியாசர் திருவுளம்பற்றினர்—எ-று. ()

எந்தயுகமானுலு மெவ்வினையோ ரானுலும் யாவரேனுந்
தந்தம்துவினைநீங்கிச் சிதம்பரங்கண்டவர்முத்தித் தலைவராவர்
வந்தவருவினைமாற்றி மற்றுள்ளயுகங்களிலெவ் வழியினுலு
மந்தமிலாவீடடைதற் கெளிதரிதுகலியுகத்தி னறிவான்மிக்கோய்.

இ-ள். எந்தயுலகத்திலாயினும் எத்தினை யுடையோராயினும் யாவராயினும் ஞானகாசசொருபனுன அம்பலவாணமூர்த்தியைத் தரிசிப்பவர்களாயின் தந்தம்வினை யாவுமகன்று மோட்சத்துக் கதிகாரிகளாவர்கள் மற்றயுகங்களிலே மனவாக்காதிகளை யொருங்குபடுத்தி உறுதியாய் நிறுத்தித் தீபவினைகளைப்போக்கி நன்மார்க்கத்தில்ஒருகாலுமழிவில்லாத முத்தியைப்பெற எளிதாயிருக்கும் அதமமாகிய கலியுகத்தில் மனமாதி உறுதிப்படுத்தாதசெய்கையினுல் முத்தியைப்பெ

றதல் அருமையாகவிருக்கும் புத்தியின்மிகுந்த சயிமினியேயென்று வாதராயணர் அருளிச்செய்தார்—எ-று. (எக)

கொடியவினைக்கிருப்பிடமாய் மிக்கபயங்கரமாகிக்கூறற்கொண்ணுக்
கடியகலியுகத்துதிப்போ ருய்யுநெறிவேறுளவோ கணக்கிலாத
நெடியவினைகடந்திடவு மரிதுசிதம்பரந்தன்னை நீங்காதாதி
முடிவொருவுபதங்கண்டான் முடியாதவினைமுடித்துமுத்திசேர்வார்

இ-ள். பொல்லாங்காகிய மகாபாதகங்கள் உறையுந்தனமாய்மிகுதியும் அச்சத்தைக்கொடுக்குங் காமாதிஅந்தரங்க சத்துருக்களின் விகாரச்செயலினால் நன்மார்க்கநீங்கிக் கடையாகிய கலியுகத்திற்பிறப்பவர்கள் ஈடேறும்விதம் வேறேயுண்டோ அளவிறந்தமகாபாதகங்களையகற்றல் அருமையாதலால்ஞானகாசமயமான சிதம்பரதலத்தைவிட்டு நீங்காமல் ஆதியந்தங்கடந்த அம்பலவாண மூர்த்தியினதுபாதாரவிந்தங்களைத் தரிசனஞ்செய்துகொண்டிருந்தால் ஒருகாலத்தினுங்கெடாத வினைகளைப்போக்கி மோக்ஷத்தைப்பெறுவார்கள்—எ-று.

சதுமறைகளகிலகலை தெரிந்தமறையவன்மற்றைத் தலங்கடன்னிற்
புதுமைபெறப்பரிமேதம் புரிபயனும்புண்டரிக புரமென்றோதப்
பதியிடத்துப்பிறந்தணிப தொருபாலன்றுயில்பயனும் பார்க்கிலீதி
லதிகமுறுபயன்பாலன் றுயில்பயனேயத்தலமே யடைதனன்றால்.

இ-ள். நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண் புராணமுதலியசகலகலைகளையும் படித்துணர்ந்த ஓர்வைதிகப்பிராமணன் இதரமாகிய தலங்களில் அதிசயமாக அசுவமேதயாகஞ் செய்யும்பலனையும் சிதம்பரதலத்தில் அக்கணமே பிறந்தவொரு சிறுகுழவி நித்திரைசெயயும் பலனையும் யோசிக்குமிடத்து இவ்விரண்டிற் சிறுகுழவி அப் புண்டரிகபுரத்தில் ஓர் நாணித்திரைசெய்த புண்ணியமே உத்தமமாகையினால் அப்பெரும்பற்றப் புலியூரைப்போய்ச் சேருவதே மிகுதியும் நன்மை—எ-று. (எங)

புளகமுலையொருபாகன் றிருவுருவாம்புண்டரிக புரத்துள்வைகி,
யளவிறந்ததீவினைக ளறியாதுபுரிந்தாலு மன்றித்தங்க, ளுளமறியப்பு
ரிந்தாலு மப்பதிநீங்காதென்று முறைமேவுமாயில், வளர்கொடியவினைப்பயனை யடையார்கள் சிவத்தடைவர் மதியான்மிக்கோய்.

இ-ள். பூரித்திலகுங் தனகலசங்களையுடைய சிவகாமசவுந்தரி வாமபாகத்தில் நிலைமையாயிருந்து மட்டுமிதமில்லாத பாதகங்களைமனதறியாமற் செய்திருந்தாலும்திராக்கரிபமாய்த்தந்தம்மனமறிந்துசெய்தாலும் அப்புண்டரிகபுரத்திலெப்போதும் நீங்காமல்வாசமாயி

ருந்ததேயாகில் மகாபாதகங்களினால் வரும் அவதிகள்பொருந்தாமற் பரசிவ அயிக்கியம்பெறுவார்கள் புத்தியிலுயர்ந்த சயிமினியேயென்று புகன்றார்—எ-று. (எச)

ஆனந்தத்திருவுருவா மக்கங்கைதனைப்பார்த்தங் கமர்ந்துமிக்க
ஞானங்கொள்பதஞ்சலிமுன் வியாகரணம்புகலவரு ணல்கிக்கொன்
தேனந்துசடையண்ண லானந்தநடங்கண்டு சிவத்திற்பேதந் [றை
தானன்றிவிளங்குபறை யுறைதில்லைவனம்பிரியார் தகுதிமேலோர்.

இ-ள். சச்சிதானந்தரூபமாகித் தீர்த்தங்களுக்கெல்லாம் அரசான சிவகங்கையைநோக்கி மேற்றிசையிலெழுந்தருளியிருந்து மிகு சிவஞானம்பெற்ற பதஞ்சலிபகவான் ஆதிகாலத்தில் வியாகரணஞ்சொல்லத்தக்கதாகஅநுக்கிரகஞ்செய்துங் கொன்றைமாலையைச்சூடி சடாடவியினையுடைய சபாபதியின் ஆனந்தநடனத்தைச் சாட்சியாகத் தரிசித்துப் பரசிவத்திடத்திற்றான் வேற்றுமையில்லாமல் ஏகரூபமாய்ப்பிரகாசிக்கும் சிவகாமசவுந்தரி நிலைமையாக எழுந்தருளியிருக்கும் சிதம்பரதலத்தை உத்தமராகி மேன்மையைப்பெற்றவர்கள் விட்டு நீங்கார்கள்—எ-று. (எரு)

மந்திரமும்புகல்சகல வித்தைகளுந்தனதுதிரு வடிவமான
வந்தமிலாவங்கவடா னிறைவுபெறவிடைவிடா தமர்ந்துஞானந்
தந்தருளியுறைகின்ற வப்பதியிலப்பதிசூழ் தக்கதேயத்
தெந்தவழியாலும்வருந்தியுமடைந்தோர்முத்திதனக்கிறைவராவோர்.

இ-ள். மந்திரங்களும் யாவராலும் துதிக்கப்படுகின்ற சகலகலைகளுந் தம்முடைய நிசரூபமாகப்படைத்து ஒருகாலத்தினு மழிவில்லாத அச் சிவகாமசவுந்தரியே பரிபூரணகலையோடுஞ் சற்றாகிலும் நீங்காம லெழுந்தருளி அடியார்களுக் கெப்போதும் சிவஞானமளித்துக்கொண்டிருக்கும் அச் சிதம்பரதலத்திலேயாகிலும் அதைச்சூழ்ந்த தேசத்திலாகிலும் அல்லது தூரதேயத்திலிருப்பவர்கள் எத்தொழினிமித்தமாயினும் எக்காயங்களைப் பூண்டாயினும் பிரயாசப்பட்டு அத்தலமடைந்தவர்கள் மோட்சத்துக்குடையராவர்—எ-று. (எசு)

ஆதிநெறிமந்திரமே தனதுவடிவாய்மன்றத் தமர்ந்துஞானச்
சோதிநிகழிவையோடனவரதத்தாண்டவஞ்செய் துணைத்தாடன்னை
போதுறுமெவ்வுயிரேனுங் கண்டபொழுதேமுத்தி யுறுவதென்றால்
வேதிமறைத்திருமுனிவ வேறுதவம்புரிவதற்கு வினைவதென்னோ.

இ-ள். முதன்மையாய் சன்மார்க்கமாகிய மந்திரங்களைத் தமது திருவடிவாகப் படைத்துத் திருச்சிற்றம்பலத்தில் ஞானப்பிரகாசரூப

மாயெழுந்தருளி அநுக்கிரகவடிவாய் விளங்குஞ் சிவகாமசவுந்தரியு டன் எப்போதும் பரமானந்த நடனஞ்செய்யும் உபயசரண கமல ங்களை எண்பத்துநான்குலட்சம் பேதமாகச் சொல்லாநின்ற எந்த ஜீவராசிகளாயினும் தரிசனஞ்செய்தவுடன் மேலானமோட்சத்தைப் பொருந்துமென்றால் வேதவிதியாய் நடக்கும் உயர் தபோதனனாகிய சயிமினியே இவ்வகை எளிதாக முத்திகிடைக்கும் ஏதுவிருக்கையில் நானாவித வருத்தமடைந்து தவங்கள்செய்து திரிபவர்க்குள்ளமதியா தோ வறியேனென்று வாதராயணருரைத்தார்—எ-று. (எஎ)

கலிவிருத்தம்.

மிக்கநற்பய னின்னவிளம்பலு
மக்கணத்தி லடிதொழுதன்பினாற்
செக்கரஞ்சடைத் தேசிகன்றன்னெதிர்
தக்கஞானச் சயிமினிகூறுவான்.

இ-ள். மிகுநன்மையாகிய பலனைத்தரும் மகிமாதிசயம் இன்ன தென்று வேதவியாசமகாமுனிவர் உபதேசிக்க அக்கணமே ஞானசாரி யரது பாததாமரைகளிற் பணிந்து நனிபத்தியோடும் செக்கர்வானம் போன்ற சடாமகுடத்தினையுடைய குருவின் சந்நிதானத்தின் முன் னர்நின்று ஒப்பற்ற ஞானத்தினையுடைய சயிமினிபகவான் விண்ணப் பஞ்செய்கின்றான்—எ-று. (எஅ)

அடிகளேமுடி வாதியறிவரும்
படியிலாத பராபரமானவெண்
பொடியிலாவிய புண்ணியமூர்த்திதன்
வடிவமந்திர மென்றனைவாக்கினால்.

இ-ள். ஆதியந்தம் அறிதற்கரிதாகி நிலையில்லாது எங்கும் வியா பகனான பராபரவஸ்துவாகிய வெண்ணீற்றின் நிலவுலவும் புண்ணிய சொருபனான பரமசிவன் திருமேனியே மந்திரமென்று திருவாய்மல ர்ந்தீரென்று சயிமினிகூறுவான்—எ-று. (எகூ)

மந்திரந்தரு வானவழிகளு
மந்தமந்திரமு மந்தமந்திர
பந்தமெய்திப் பரன்பொலிகின்றது
மெந்தையேயரு ளாலின்றியம்புவாய்.

இ-ள். மந்திரங்கள் திருமேனியைச்சார்ந்த மார்க்கமும் அவற் றின்வயனங்களும் அம்மந்திரங்களை எழுதிச்சேர்த்தவிடங்களை அவை யவங்களாய் அம்பலவாணமூர்த்தி வகித்துக்கொண்டிருப்பதை எந

தையே அடியேனிடத்திற் கிருபைவைத்து இக்கணமே உபதேசிப் பாயென்று கூறுவான்—எ-று. (அ௦)

ஏற்றபக்குவ மேயதினலினி
சாற்றுவாயெனத் தாழ்ந்தவன்சாற்றிய
கூற்றைநோக்கிக் குறிக்கருமாதவத்
தாற்றல்சான்முனி யங்ஙனறைகுவான்.

இ-ள். அப்படியே சிதம்பர ரகசியப்பொருளைக் கேட்கத்தக்க பக்குவனென்று தேவரீர்சித்தத்திற்றேர்ந்ததனல் அந்தரகசியத்தை யருள்செய்யவேண்டுமென்று சயிமினிபணிந்து அஞ்சலிசெய்துகொண்டிருக்கும் வணக்கத்தைக்கண்டு அளவிடப்படாத தபத்தினையுடைய வேதவியாசர் சொல்லுகின்றார்—எ-று. (அக)

எந்தைபாற்பெற் றிறைவிமுன்னிந்தனள்
கந்தனுக்கவன் கட்டுரைத்தானெறி
தந்தவாய்மைச் சனற்குமாற்கெனக்
கந்தமில்லவ னன்பாலருளினன்.

இ-ள். எந்தையாகிய பரமசிவனிடத்திற் பார்வதிதேவி உபதேசம்பெற்று முன்னஞ் சுப்பிரமணியனுக் குபதேசித்தாள் அவற்றை ஆறுமுகக்கடவுள் சனற்குமாரனுக் குபதேசஞ்செய்தார் அம்முனிவரர் அடியேனிடத்திலே அன்புவைத்து உபதேசஞ்செய்தாரென்று வாதராயணர் சயிமினிக்கருளினர்—எ-று. (அஉ)

நாட்டுமந்திர மேனியுநன்குறக்
கோட்டியந்திரக் கொள்கையுங்கொள்கையைக்
காட்டுமங்கதிற் காட்சியுமாட்சியால்
வாட்டமொன்றிலா மந்தணமாகுமால்.

இ-ள். எழுதப்பட்ட மந்திரசொருபமும் நன்மைபெற்ற அவ்வீடுகளின்யந்திரத்தின் லட்சணமும் அந்தந்த வீடுகளைப்படுத்து பீஜாட்சரங்களை எழுதிக்காட்டும் அழகார்ந்த அப்பிரகாசத்தின் தரிசனமகிமையினல் ஒரு குறைவில்லாமலோங்குமென்று சயிமினிக்குரைத்தார்—எ-று. (அ௩)

ஈந்ததேசிக னிங்கிதுசேவைசெய்
தாய்ந்தநூல்க ளறைந்தகுணத்தராய்
வாய்ந்தமாணவர் கற்கன்றிமாசிடைத்
தோய்ந்தபேர்க்கென்றுஞ் சொல்லலையன்றியும்.

இ ள். இப்படி சிதம்பர ரகசியப்பொருளை யுத்தேசஞ்செய்த ஞானகுருவாகிய வேதவியாசர் சயிமினிக்குப் புத்தி கட்டளையிட்டபடி பணிசெய்துகொண்டு சகலசாஸ்திரங்களுமுணர்ந்த வைதீகப்பிராமணராய் பூததயவும் இரக்கமுமுடைய நன்மார்க்கம்பொருந்திய ஜீவருக்கேயல்லாமல் ஆணவாதி மும்மலங்கொண்டிருக்கும் ஜீவர்களுக் கெப்போது மிதனை உபதேசஞ்செய்பவேண்டாமென்று பின்னையுங் கூறுவார்—எ-று. (அச)

அறைந்ததிப்பொருண் மாசறவாகம
மறைந்தவீசன தாணையதாமிது
சிறந்ததூயர் கடவார்திகழ்வுறப்
பிறந்தநற்பயன் பெற்றுடையோர்கடாம்.

இ-ள். யாவருக்குங் காட்டப்படாமற் றிரைமறைவாக யிருக்கும் மந்திரரகசியப்பொருளை இருபத்தெட்டாகமங்களையுங் களங்கமறத் திருவாய்மலர்ந்த பரமசிவனுடைய ஆக்கினையே இப்போதுரைத்த விதனை அரிதான மானிடஜனனமெடுத்தபின்பு அதிலு மகாபாக்கியம் பெற்றவர்கள் எவர்களாலு மீறி நடக்கக்கூடாமற் பிரகாசிக்கும் இப் பரமசிவனுடைய ஆக்கினையைத் தள்ளிநடவார்கள்—எ-று.

உற்றபக்குவற் கோதாதுபக்குவ
மற்றவற்கரு ளன்பாலுணர்ச்சியைச்
சொற்றதேசிகர் தோயுங்கலைமதி
முற்றுமாய முடிவதுதிண்ணமால்.

இ-ள். நான் என்னதவஞ்செய்தேனோ என்னாசிரியராகிய ஒப்பற்ற சனற்குமாரமகாமுநிவர் என்னை யருட்கண்ணாற்பார்த்து நல்ல பக்குவ ஆத்மாவாகிய உன்னிமித்தம் உபதேசஞ்செய்தனிஃதென்று முன் விருப்பத்துடனே கட்டளையிட்ட மொழியின்வண்ணம்—எ-று

என்னநன்னலத் தென்றன்குரவனாந்
தன்னிகர்க்குஞ் சனற்குமரன்பரிந்
துன்னைவேண்டி யுரைத்ததிதுவென
முன்னரன்பின் மொழிந்தமொழியினால்.

இ-ள். என்ன நன்மையினாலேயோ என்குருவாகிய இணையில்லாச் சனற்குமாரமகாமுநிவர் பிரியத்தோடும் உன்னிமித்தம் இம் மகாவாக்கியத்தை உபதேசித்தோமென்று விருப்பத்துடன் கட்டளைபுரிந்த மொழியினால்—எ-று. (அரு)

உன்கருத்தை யளவிட்டுணர்ந்திடா
தென்கருத்தைய மெய்தியதென்றுடன்
வன்கருத்தறு மங்கையோர்பங்கனைத்
தன்கருத்திற் றழூவியிருந்தனன்.

இ-ள். சயிமினி உனதுகருத்தினது நிலைமையை அறியாமையா ல் என்னுடைய கருத்திற் சந்தேகந் தோன்றியதென்று அக்கணமே கொடுமையில்லாத மனத்தினையுடைய சிவகாம சவுந்தரியை வாமபா கத்திற் றரித்திருக்கும் அம்பலவாண மூர்த்தியை வேதவியாசர் இத யாரவிந்தத்திலிருத்தி தியானஞ்செய்து கொண்டிருந்தார்—எ-று. ()

இன்னவேலையின் வானிடத்தின்பமே
துன்னுசூதன் சயிமினிதூயவர்
நின்னையொப்பர் நிமலன்சிதம்பரந்
தன்னிலுண்மை தரிக்கவுங்கேட்கவும்

இ-ள். இப்படி வேதவியாசர் சிவத்தியானஞ் செய்துகொண்டி ருக்கிற வேளையிலே அசரீரியானது பிரகாசம் பொருந்திய இச் சூத மா முநியும் சயிமினியும் பரிசுத்தமானவர்கள் சிதாகாசமான சிதம்ப ரரகசியத்தை மனதிலேமதிக்கவுங் கேட்கவும் உனக்கு இணையானவ ர்களென்று சொல்லியது—எ-று. (அக)

நிலைகொண்ஞான நெறிபுனைமாதவ
வலைவிலீங்கிவர்க் கன்பாலறைதியென்
றலைவுநீங்கி யுவப்பவெழுந்ததாற்
றலைமைமீக்கொள் சரீரமில்வாசகம்.

இ-ள். நித்தியமான உறுதியைப்பெற்ற ஞானமார்க்கத்தையணி ந்த மகா சிதம்பர மந்திரமகிமையைச் சஞ்சலமில்லா விச் சூதமுநிவ னுக்கும் சயிமினிபகவானுக்கும் விருப்பத்துட னுபதேசஞ்செய்யெ ன்று வேதவியாசர் சந்தேகந்தீர்ந்து சந்தோஷிக்க மிகுதியு மேன்மை கொண்ட அசரீரி ஆகாயத்திற் றோன்றியது—எ-று. (கூ0)

அங்கண்வானத் தருண்மொழிகேட்டு
னெங்கடேசிக னெங்களைநோக்கிமெய்ப்
பொங்குறற்புள கம்பொலிவெய்திடத்
தங்குமாதர மேற்கொளச்சாற்றுமால்.

இ-ள். அங்ஙனம் அசரீரியுரைத்த வாக்கியத்தைக்கேட்ட் எங்க ள் குருவாகிய வேதவியாசர் சயிமினியையு மென்னையும் பார்த்துத் தேகம் ஆனந்தித்தான் மயிர்க்குச்செறிந்து மிகுதியும்விளங்களங்களி டத்தில் அதிக விருப்பம்பொங்கிச் சொல்லுகின்றார்—எ-று. (கூக)

சத்தியங்கொள் சரீரமில்வாசக
சித்தநீணெறு நீங்கள்பெறவருள்
வைத்தெழுந்திட நீர்புரிமாதவ
மெத்துணைத்தென யாவரியம்புவார்.

இ-ள். நித்தியனான பரமசிவன் உயர்வுபெற்ற இம்மந்திரப்பொருளின்மார்க்கம் நீங்களிருவரும் பெறும்பொருட்டாகக் கருணைவைத்து உண்மையாய்விளங்கும் அசரீரிதோன்றும்படி செய்தமையான் நீவிர் செய்த தபோபலனை எவர்களாற்சொல்லி முடியுமென்று வேதவியாசர் அதிசயித்தார்—எ-று. (கூஉ)

பொன்பொதிந்த புனிதனடந்தொழற்
கன்புசெய்தற் கருமையுண்டாகுமா
லின்பமென்று மிசைந்திடவெண்ணினீர்
முன்புமாதவ மென்னமுயன்றனிர்.

இ-ள். தங்கமயமாய்பரிசுத்தமான அம்பலவாணமூர்த்தியினது ஆனந்தநடனத்தைக்கண்டு தியானஞ்செய்துபணிவதற்குபக்தியுடையவராய் அரிய பெருமையையடைதற்கு அவ்வகைப்பட்டதை எப்போதும் பேரானந்தத்தோடு அநுபவிக்கநினைத்த நீங்கள்முன் என்ன தபஞ்செய்தீர்களோவென்று வாதராயணர் மகிழ்ந்துரைத்தார்—எ-று

மற்றென்வாசக மாணுக்கராயுமைப்
பெற்றவென்னிற் பெரியவர்யார்வினை
செற்றமாணவ கர்ப்பெறத்தேசிக
ருற்றமாதவஞ் செய்தானுளதரோ.

இ-ள். பின்னும் யான் என்னென்று சொல்லப்போகின்றேன்நன்குவாய்ந்த அறிவையுடைய உங்களைச் சீடராகப்படைத்தபாக்கியவசத்தினாலே என்னினும் பெருமைபெற்றவர் யார் துன்பத்துக்கிடமான தீவினைத்தொழில்களிலே மனோவாக்குக் காயங்களைச் செலுத்தாமல் ஜெயம்பெறுஞ் சீடனைப்பெறுவதற்குக் குருவானவன் மேன்மையான தபஞ்செய்திருந்தால் சித்திக்குமென்று பராசரியர் தம்மைத்தாமே புகழ்ந்துகொண்டார்—எ-று. (கூசு)

அத்தனின்றினி தாடுஞ்சிதம்பர
வித்தையாய்ந்து விளங்கினர்யாவரு
முத்திபெய்துவ மூவலகத்துளு
மித்தகைப்பொரு டன்னையிசைத்திலம்.

இ-ள். உலகங்களுக்கெல்லாந் தந்தையாகிய பரமசிவன் நின்று லோகத்துக்குச் சுகத்தைக் கொடுக்கும்படியாய் ஆனந்தநடனம்புரியுஞ் சிதம்பரமந்திரத்தைச் சோதித்துப் பிரகாசிக்குஞ் சிவஞானமுண்டாகி யாவர்களும் மேலானமோட்சத்தைச் சேர்வார்கள்மூன்றுலகங்களினுமுள்ள அறிவுடைய எவர்களுக்கும் இச் சிதம்பரரகசியப்பொருளை நாம் உபதேசித்ததில்லை—எ-று. (கூரு)

மாறுநீக்கிய மாணுக்கரின்மையிற்
கூறினேமிலை கோதையோர்பாகனுக்
கேறுமன்பினிர் நீவிரிதுதனைத்
தேறுமின்னெனச் செப்புதன்மேயினுன்.

இ-ள். சிவஞானத்துக்கு மாறுபாடில்லாத சித்தத்தையுடையசீடர்களில்லாமையால் இந்நேரவரையில் நாம் ஒருவருக்கும் உபதேசஞ்செய்ததில்லை நீங்களிருவருஞ் சிவகாம சவுந்தரியை வாமபாகத்திலுடைய பரமசிவனுக்குச் செலுத்தாநின்ற பக்தியையுடையவர்களாகையினுல் இந்த சிதம்பரமகிமையைத் தெளிவாக மனதிலே உறுதிப்படுத்திக்கொள்ளுங்களென்று இருவர்களுக்கு முபதேசித்தார்-எ-று.

இந்தவெல்லை மலைநாட்டிடத்தினும்
வந்ததெய்வ வடமொழியின்படிச்
செந்தமிழ்த்தொடை நூற்பாற்றெரித்தன
முந்துமற்றதும் வந்தான்மொழிதுமால்.

இ-ள். இச் சிதம்பரபுராணம் ஒன்பதுசருக்கமும் மலையாளதேசத்திலிருந்துவந்த தெய்வபாஷையாகிய கிரந்தவாக்கியத்தின்படிசெம்மைபொருந்திய திராவிட பாஷையில் விருத்தப்பாவினத்தினுற் சொன்னேம் இதற்கு முந்தியமகிமைகள் வருமாயின் மேலுஞ்சொல்லுவோம்—எ-று. (கூஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருமறையின் சிரத்தொளியா யானந்தநாட்டியஞ்செய் யமரர்கன்பாய், திருவருள்பெற்றுயர்சைவ புராணத்திற் சிதம்பரத்தின் மிகழுமேன்மைப், பொருடெரிய தமிழ்விருத்த யாப்பதனு னவரசங்கள் பொலியமன்னுந், திருமலைநாதன்புதல்வன் பரஞ்சோதி மாமுநிவன் செப்பினுனே.

இ-ள். கல்விகளுக்கெல்லா முதன்மையாகியும், உத்தமமாகியும், எழுதப்படாத வேதங்களின் சிரமாகிய உபநிடதங்களிலவிளங்கிஆன

ந்தநடனம்புரியும் அம்பலவாணமூர்த்தியினுடையபாதாரவிந்தங்களி லேபக்திபூண்டு நிலைமையானகீர்த்தித் தேகம்படைத்த திருமலைநாத ன்செய்ததவப்பயனே பிள்ளையாகவவதரித்தபரஞ்சோதிமாமுனிவன் சிவனுடைய அநுக்ரகம்பெற்று மேன்மையான சைவபுராணத்திற்பி ரகாசிக்குஞ் சிதம்பரதல மகிமாதிசயப்பொருளை நல்லோர்களறியத் தக்கதாகத் தென்மொழி விருத்தப்பாவினங்களினால் நவரசவலங்கா ரங்கள் வளர்ச்சிபெறப் பாடினன்—எ-று. (கூஅ)

கலி விருத்தம்.

தாவிலாமறைச் சைவந்தழைத்திடக்
காவல்வேந்துடன் காசினிவாழ்ந்திடத்
தேவர்தேவன் திருவுருவாகிய
மூவர்பாட்டும் மூவுலகோங்கவே.

இ-ள். உத்தமமான வேதாகமங்களின் முறைமையான சைவச மயம் வளர்ச்சிபெறவும், பூமியைக்காத்து இரட்சிக்கும்இராஜாக்களு ம் உலகங்களுஞ் சகலவளப்பம்பெற்று விளங்கவும், தேவர்களுக்கெ ல்லாங் கர்த்தனான பரமசிவன் திருவடிவாகிய திருஞானசம்பந்தமூ ர்த்திசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகள், இம்மூவருமோதிய தேவாரங்கள் மூன்றுலகங்களிலும் பிரகாசித்துக் கொண்டிருக்க—எ-று. (கூகூ)

தற்றெரிசனச்சருக்க — முற்றிற்று.

---

பாயிரம் உட்பட சருக்கம் பத்துக்குத் திருவிருத்தம்-அகஈ.

திருச்சிற்றம்பலம்.

---

சிதம்பரபுராண மூலமும்உரையும்.

முற்றுப்பெற்றது.




